முன்பக்கத் தொடர்:-

## ஜனநாயக ஆட்சி அமைப்புக்காக!

(1) மந்திரிகள், உயர்தர அதிகாரிகள், உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களையும் அலவன்ஸ்களையும் குறைத்தல். (2) போலீஸ் பட்ஜெட்டை குறைத்தல். ஆனாலும் பாதிக்கப்படுவோருக்கு வேறு வேலை அளிக்கப்படும் என்னும் உத்தரவாதம் அளிப்பது. (3) கிராமங்களிலும், நகரங்களிலும் மக்கள் கமிட்டிகளின் மூலம் செயலாற்றும் முறையில் பயிற்சி பெற்ற ஹோம்கார்டுகளை அமைத்தல். (4) எல்லா சர்க்கார் சிப்பந்திகளுக்கும் தொழிற்சங்க உரிமைகள் அளித்தல். சர்க்கார் உத்தியோக விதிகளை திருத்தல். (5) மாகாண அரசாங்க சிப்பந்திகளுக்கு மத்திய சம்பள கமிஷன் சிபார்சுகளை அமுல் நடத்தல். (6) அவர்களுக்கு இடைக்கால உடனடி நிவாரணம் அல்லது போனஸ் அளித்தல். (7) ஆரம்ப, செகண்டரி பள்ளி ஆசிரியர்கள், சர்வகலாசாலை ஆசிரியர்களின் சம்பள விகிதங்களை உயர்த்துதல். (8) நிர்வாகத்திலுள்ள லஞ்ச பேர்வழிகளை கண்டுபிடிப்பதற்கு உதவும் முறையில் அரசாங்க ரகசிய சட்டத்தை திருத்துதல். (9) மத்திய அரசாங்கத்தால் மாகாணத்தில் வசூலிக்கப்படும் வரிகளில் 50 சதமானம் மாகாண அரசாங்கத்திற்கு கிடைக்கப் பாடுபடுதல். (10) ஸ்தல ஸ்தாபனங்களுக்கு கல்வி, சுகாதாரம், ரோடுகள், இதர துறைகளில் அதிக அதிகாரம் வழங்குதல். ஸ்தல ஸ்தாபன அதிகாரிகள் ஸ்தல ஸ்தாபனங்களின் கீழ் இருக்கவேண்டும். ●✱●

## அரசியல் சட்டத்திற்கு திருத்தம்:-

(1) கவர்னர் நியமனத்தை ரத்து செய்வதற்கு சிபார்சு செய்யும் சட்டம். (2) ராஜ்யத்தின் தலைவர் சட்டசபையால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். (3) பிரிட்டிஷ் முதலாளிகளின் ஸ்தாபனங்களையும், பங்குகளையும் அரசாங்கம் எடுத்துக் கொள்ள சிபார்சு செய்யும் சட்டம் (4) மாகாண சர்க்கார்களைக் கலைக்கவும், சட்டசபைகளால் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களுக்கு அங்கீகாரம் மறுக்கவும், அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கவும், அவசரகால நிலைமைகளைப் பிரகடனப் படுத்தவும், ஜனாதிபதிக்குள்ள உரிமைகளைப் பறிமுதல் செய்யும் முறையில் அவருக்குள்ள உரிமையைக் குறைத்தல். ●●✱●●

## அமெரிக்க இறக்குமதி:-

1951 செப்டம்பர் முதல் 1952 ஆகஸ்ட் வரை ஒரு வருடத்தில் அமெரிக்காவிலிருந்து 11 லட்சத்து 25 ஆயிரம் பேல் பருத்தியும் மற்ற நாடுகளிலிருந்து 4 லட்சத்து 75 ஆயிரம் பேல் பருத்தியும் இறக்குமதியாகிறது. இதே வருடத்தில் இந்தியாவில் 33 லட்சம் பேல் உற்பத்தியாகுமென்றும் இந்திய பஞ்சாலைகளுக்கு இதில் 27 லட்சம் பேல் கிடைக்குமென்றும் இத்துடன் இறக்குமதியாவதையும் சேர்த்தால் பஞ்சாலைகளின் தேவை பூர்த்தியாகுமென்றும் சர்க்கார் கூறுகிறது. பின்னால் ஒரு பாகம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகிறது. மொத்த பருத்தி இறக்குமதியில் 70 சதவிகிதம் அமெரிக்காவிலிருந்து வருகிறது. யுத்த சாதனங்கள் மட்டுமின்றி இவைப் பொருள்களுக்கும் நம்பிவாழவேண்டிய காரணமாகவே இந்தியா உள்ளது. ●✱●

## மத்திய மேல் சபைக்கு மொத்த ஸ்தானங்கள்:- 216

அஸ்ஸாம் 6, பீஹார் 21, பம்பாய் 17, மத்ய பிரதேசம் 12, சென்னை 27, ஒரிஸா 9, பஞ்சாப் 8, ஐக்கிய மாகாணம் 31, மேற்கு வங்கம் 14, ஹைதராபாத் 11, மத்யபாரத் 6, மைசூர் 6, பெப்ஸு 3, ராஜஸ்தான் 9, சௌராஷ்டிரா 4, திருவாங்கூர் கொச்சி 6, அஜ்மீர் கூர்க் 1, போபால் 1, பிலாஸ்பூர் ஹிமாசல பிரதேசம் 1, டெல்லி 1, கட்ச் 1, மணிப்பூர் திரிபுரா 1 இதுபோக ஜம்மு காஷ்மீருக்கு 4 அங்கத்தினர்கள் உண்டு. A.B.C. ராஜ்யங்களின் சட்டசபைகளாலும், D ராஜ்யங்கள் தேர்தல் காலேஜுகளைத் தேர்ந்தெடுப்பவர்களாலும் தேர்ந்தெடுக்கப்படுவர். ●✱●